22nd March 1961]

(இ) வெளிநாட்டு உதவி இதற்கு உண்டா ?

(உ) இதன் உற்பத்தி சக்தியும், வேலை வாய்ப்பு அளவும் என்ன ?

(எ) எவ்வளவு மூலதனத்தில் இது துவக்கப்பட இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The industrial undertaking referred to by the hon'ble Member is being set up in the private sector and neither the State Government nor the Central Government has any financial interest in it.

(இ), (உ) & (எ) Since the Industry is entirely in the private sector, Government have no responsibility in these matters.

SRI A. VEDARATHNAM : இந்த இயந்திரசாலையை அமைப்பதற்கு எந்த வெளிநாட்டார் உதவியைக் கேட்டார்கள். இங்கு உற்பத்தி செய்யும் டிராக்டரின் விலை எவ்வளவு ?

THE HON. SRI R. VENKATARAMAN : எந்த வெளி நாட்டிலிருந்து வந்தார்கள் என்று சொல்லத் தயாராய் இல்லை. ஆனால் 3,000 டிராக்டர்கள் உற்பத்தி செய்ய முடியும் என்று சொல்ல முடியும்.

*Bonus to workers*

* 997 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வருடா வருடம் தொழிலாளர்களுக்கு போனஸ் தகராறில்லாமல் கிடைக்க ஆராய்ச்சி செய்ய கமிட்டி அமைக்க உத்தேசமுண்டா ?

(இ) எந்த அடிப்படையில் ? விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (இ) இதுபோன்ற கமிட்டி அமைக்க ராஜ்ய அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லை.

SRI V. K. KOTHANDARAMAN : பத்திரிகையில் பார்த்தோம், கனம் தொழிலாளர் அமைச்சர் அபிப்பிராயம் ஒன்று வெளியிட்டதை ; மூன்று மாதம் போனஸ் வரக்கூடிய பணத்தை ஸ்மால் சேவிங்ஸில் போடவேண்டுமென்ற அடிப்படையிலே ஒரு திட்டம் வரப் போவதாக. இதுமாதிரி திட்டம் ஏதாவது உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது மூலக் கேள்விக்குச் சம்பந்தமில்லை என்று சொன்னாலும் மூன்று மாதத்திற்கு அதிகமாக போனஸ் வாங்கக்கூடிய தொழிலாளர்கள் அவர்களுடைய வருங்கால நன்மையை உத்தேசித்து சட்டம் இயற்றவேண்டுமென்ற அபிப்பிராயம் சர்க்கார் பரிசீலனையில் இருக்கிறது.

*Cheatings*

* 998 Q.—SRI T. S. RAMASWAMY :
SRI A. A. RASHEED : } Will the Hon. the Minister for Home be pleased to state the number of cases brought to the notice of the Government where the public have been cheated by persons posting as astrologers, palmists, psychopaths, magicians, fortune-tellers, fortune-changers and doctors?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The number is thirteen, Sir.